Regd. No TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 6 பக்கம் விலை 45 காசு



**ஆர்வம்**

கொடுமைகளைக் களைய, சிறுமைகளை சிரழிவுகளைப் போக்க ஆர்வம் தோன்ற வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**சாதி நோய்**

சமுதாயத்தை நாசப்படுத்தி வரும் சாதி நோய்க்கான மூல காரணங்களைக் கண்டறிந்து ஒழிக்க வேண்டும்.

-தந்தை பெரியார்

மலர்: 6 சென்னை 27 - 9 - 82 திங்கள் வெளியூர் 28 - 9 - 82 செவ்வாய் இதழ்: 338

## பெரியகுளம் இடைத்தேர்தல்:

# ஓட்டு எண்ணிக்கை நிலவரம்

மதுரை, செப். 27- நேற்று நடைபெற்ற பெரியகுளம் நாடாளுமன்றத் தொகுதி இடைத்தேர்தலில் பதிவான வாக்குகள் இன்று காலை 7 மணிக்கு எண்ணப்பட்டன. ஓட்டு எண்ணப்பட்டதிலிருந்தே கழக வேட்பாளர் ஜக்கையன் அதிக ஓட்டு பெற்று வந்தார்.

பெரியகுளம் நாடாளுமன்ற இடைத்தேர்தலில் நேற்று பதிவான ஓட்டுக்கள் இன்று பெரியகுளத்தில் உள்ள ஜெயராஜ் அன்னபாக்கியம் கல்லூரியில் எண்ணப்பட்டன.

அதிகாலை 7 மணிக்கு ஓட்டு எண்ணிக்கை தொடங்கியது.

தொடக்கத்தில் இருந்தே கழக வேட்பாளர் ஜக்கையனுக்கு அதிக ஓட்டுக்கள் கிடைத்து வந்தன.

முதன்முதல் வந்த பி. டி. ஐ. செய்தி தி. மு. க.வைவிட கழக வேட்பாளருக்கு 2 ஆயிரம் ஓட்டுக்கள் அதிகம் என்று செவிகளில் செந்தேனாய்ப் பாய்ந்தது.

எண்ணிக்கை வெகு தீவிரமாக நடந்தது. 11.30 மணி நிலவரப்படி. தி. மு, க.வை விட கழ்க வேட்பாளருக்கு 12 ஆயிரத்து 500 ஓட்டுகள் அதிகம் கிடைத்திருந்தது.

பகல் 1 மணி நிலவரப்படி, கழகத்திற்கு 20 ஆயிரம் ஓட்டு தி. மு. க.வை விட அதிகம் கிடைத்துள்ளது.

இ. காங்கிரஸ், கம்யூனிஸ்ட், நாயுடு கட்சி ஜனதா போன்றவை மிகவும் குறைவான ஓட்டுக்களே பெற்றுள்ளன.

ஓட்டு எண்ணி முடிக்க நள்ளிரவு ஆகிவிடும் என்று தெரிகிறது.

## 12-30 மணி நிலவரம்

மொத்தம் 7 ரவுண்டு ஓட்டுக்கள் எண்ண வேண்டியதில் முதல் 2 ரவுண்டு எண்ணிக்கை முடிந்தபின் நிலவரம் வருமாறு:—

| | |
|---|---|
| கழகம் | —63272 |
| தி. மு. க. | —44090 |

கழகத்துக்கு 19182 ஓட்டுக்கள் கூடுதலாகக் கிடைத்தன.

மற்ற கட்சிகளுக்கு 2-வது ரவுண்டு எண்ணிக்கையில் கிடைத்த ஓட்டுக்கள் வருமாறு:—

| | |
|---|---|
| இ. காங்கிரஸ் | —6484 |
| மார்க்சிஸ்ட் | —1750 |
| ஜனதா | —619 |
| நாயுடு கட்சி | —447 |

கழகத்திற்கும், தி. மு. க. வுக்கும் ஒவ்வொரு தொகுதியிலும் கிடைத்த ஓட்டு பகல் 12.30 மணி நிலவரப்படி வருமாறு:—

**போடி**

| | |
|---|---|
| கழகம் | —2796 |
| தி. மு. க. | —1964 |

**தேனி**

| | |
|---|---|
| கழகம் | —5336 |
| தி. மு. க. | —4055 |

**பெரியகுளம்**

| | |
|---|---|
| கழகம் | —4205 |
| தி. மு. க. | —1906 |

**சேடப்பட்டி**

| | |
|---|---|
| கழகம் | —4684 |
| தி. மு. க. | —2385 |

**ஆண்டிப்பட்டி**

| | |
|---|---|
| கழகம் | —5448 |
| தி. மு. க. | —3081 |

**கம்பம்**

| | |
|---|---|
| கழகம் | —4299 |

சுமார் 1 லட்சத்து 25 ஆயிரம் ஓட்டுக்கள் எண்ணியதில் உள்ள நிலவரம் இது.

## பிற்பகல் நிலவரம்

**பிற்பகல் நிலவரப்படி கழகத்திற்கு தி. மு. க. வை விட 35,000 ஓட்டுக்கள் கூடுதலாகக் கிடைத்துள்ளன.**

## இரண்டு இலட்சம் ஓட்டுக்கள் எண்ணல்

பிற்பகல்வரை பெரியகுளத்தில் 2 இலட்சம் வாக்குகள் எண்ணப்பட்டு இருப்பதாக பி. டி. ஐ. தெரிவித்துள்ளது.

மொத்தம் 7.75 லட்சம் வாக்காளர்கள் பெரியகுளத்தில் உள்ளனர். இதில் சுமார் 70 சதவிகித வாக்காளர்கள் நேற்று வாக்களித்துள்ளனர்.

இதில் இன்று பிற்பகல் சுமார் 2 லட்சம் வாக்குகள் எண்ணப்பட்டுள்ளன.

கோவையில்:

## அண்ணா தொழிற்சங்க பேரவையில் 235 பேர் இணைந்தனர்

கோவை, செப். 27- கோவை பங்கஜா மில் தொழிலாளர்கள் 235 பேர், பல்வேறு தொழிற்சங்கங்களில், இருந்து விலகி அண்ணா தொழிற்சங்க பேரவையில் இணைந்தனர்.

அண்ணா தொழிற்சங்க பேரவைத்தலைவர் யு. ஆர். கிருஷ்ணன் இது குறித்து தெரிவித்துள்ளதாவது:—

கோவை பங்கஜாமில் (என். டி. சி.) தொழிலாளர்களில் 235 பேர் பல்வேறு தொழிற்சங்கங்களில் இருந்து விலகி, பஞ்சாலை அண்ணா தொழிலாளர் சங்கத்தில்

(7-ம் பத்தி பார்க்க)

## தேர்தல் முடிவு: பொதுமக்கள் ஆர்வம்

சென்னை, செப். 27— பெரியகுளம் தேர்தல் முடிவை அறிய இன்று காலை 10 மணி முதல் "அண்ணா" அலுவலகத்துக்கு ஏராளமான பேர் டெலிபோன் செய்தனர்.

இதேபோல் தலைமைக் கழகத்திற்கும் ஏராளமான பேர் வந்தும், தொலைபேசியில் தொடர்பு கொண்டும் ஓட்டுநிலவரத்தை கேட்டனர்.

## வேலூரில் 150 மூட்டை நெல் பிடிபட்டது

வேலூர். செப். 27— வேலூரில் ஒரு லாரியில் ஏற்றிச் செல்லப்பட்ட 150 மூட்டை நெல்லை போலீசார் கைப்பற்றியுள்ளனர்.

வேலூர் அருகே தண்டம்பட்டி கிராமத்தில் இது கைப்பற்றப்பட்டுள்ளது.

லாரியை ஓட்டி வந்த டிரைவர் கைது செய்யப்பட்டு மாஜிஸ்திரேட் முன்பு ஆஜர்படுத்தப் பட்டார். அவர் 15 நாட்கல் காவலில் வைக்கப்பட்டுள்ளார்.

ஊனமுற்றோருக்கு

## ஆதிதிராவிடர் விடுதிகளில் இட ஒதுக்கீடு

வேலூர், செப். 27— அரசினால் நடத்தப்படும் ஆதிதிராவிடர் நலத்துறை விடுதிகளில் மாணவ மாணவிகளை சேர்ப்பதில் 3 சதவிகித இடங்கள் உடல் ஊனமுற்றோருக்கு ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. பிற்பட்டோருக்கு ஏற்கனவே ஒதுக்கப்பட்ட 20 சதவிகித இட ஒதுக்கீட்டில் விதவைகளின் குழந்தைகளுக்கு, ஏனைய தகுதிகள் பெற்றிருந்தால் விடுதிகளில் சேர்ப்பதற்கு முன்னுரிமை வழங்கவும் அரசு உத்தரவிட்டுள்ளது.

வடாற்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் நாராயணன் வெளியிட்டுள்ள பத்திரிக்கைக் குறிப்பில் இத்தகவல்கள் வெளியிடப்பட்டுள்ளன.

ஓட்டு எண்ணிக்கை ஆரம்பித்ததும்

## ஜெயித்து விட்டதாக பொய் கூறிய தி.மு.க. பட்டாசும் வெடித்தனர்

மதுரை, செப். 27- பெரியகுளத்தில் இன்று ஓட்டு எண்ணிக்கை ஆரம்பமான ஒரு சில மணி நேரத்துக்கெல்லாம் தாங்கள் ஜெயித்து விட்டதாகப் பொய் கூறி தி. மு. க. வினர் பட்டாசு வெடித்தனர்.

பெரியகுளம் நாடாளுமன்றத் தொகுதியில் பதிவான ஓட்டுக்கள் அன்னபாக்கியம் உயர்நிலைப் பள்ளியில் இன்று எண்ணப்படுகின்றன.

ஓட்டு எண்ணும் இடத்திற்கு அருகில் பலத்த போலீஸ் பந்தோபஸ்து போடப்பட்டிருந்தது.

சற்று தொலைவில் ஏராளமான மக்கள் கூடியிருந்து ஓட்டு எண்ணிக்கை நிலவரத்தைக் கேட்டறிந்தனர்.

தாய்மார்கள் பலரும் "எம். ஜி. ஆர். ஜெயித்து விட்டாரா?" என்று ஆவலுடன் கேட்டுக் கொண்டிருந்த காட்சியை பெரியகுளம், தேனி, போடி, கம்பம் போன்ற இடங்களில் காணமுடிந்தது.

தொடக்கத்திலிருந்தே கழகம் முந்திக் கொண்டிருந்தது. அந்தச் செய்தியைக் கேள்விப் பட்டதும் மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தனர்.

பெரியகுளம் நகரில் தி. மு. க. வினர் வழக்கம் போல் பொய்ப் பிரச்சாரம் செய்தனர்.

தி. மு. க. அதிக ஓட்டுகள் பெற்று முன்னணியில் இருக்கிறது என்று தி. மு. க.நபர்கள் வீதிவீதியாகக் கூவிக்கொண்டு சென்றனர்.

இதைக் கேட்டு ஏராளமான மக்கள் குறிப்பாகத் தாய்மார்கள் அதிர்ச்சி அடைந்தனர்.

தி. மு. க. வெற்றி என்று பொய் கூறி தி.மு.க. வினர் பட்டாசும் வெடித்தனர்.

பின்னர் கழகத்தோழர்கள் சென்று புரட்சித் தலைவரின் வேட்பாளர் தான் முன்னிலையில் இருக்கிறார் என்ற விவரத்தைக் கூறிய பின் மக்கள் கவலை மறந்து மகிழ்ச்சி கொண்டனர்.

நேரம் ஆக ஆக கழகத்திற்கு அதிக ஓட்டுக்கள் கிடைத்துக் கொண்டே இருந்தது.

இதைக்கேள்விப் பட்டதும், வெளியே கூடி இருந்து பொய் கூறிக் கொண்டிருந்த தி. மு. க. வினர் ஒவ்வொருவராக அங்கிருந்து நழுவி விட்டனர்.

(3-ம் பத்தி தொடர்ச்சி)

சேர்ந்தனர்.

இதில் 102 தொழிலாளர்கள் ஐ.என்.டி.யு.சி.யிலிருந்தும், தி.மு.க. தொழிற் சங்கத்தில் இருந்து 69 பேரும் விலகி வந்து அண்ணா தொழிலாளர் சங்கத்தில் சேர்ந்தனர்.

## சிறப்பான விழா

பங்கஜாமில் முன்புறம் நடந்த தொழிற்சங்க விழாவில் அண்ணா தொழிற்சங்க பேரவை த தலைவர் யு. ஆர். கிருஷ்ணன் எம். பி. மாவட்ட பஞ்சாலை இணைப் பொதுச்செயலாளர் நா. கருப்புசாமி, தலைமைக் கழக பேச்சாளர் சிங்கை ராமு, மற்றும் கி. தேவராசன், ஆர். பழனிச்சாமி. முனியப்பன், கருப்பண்ணன், வி. ராமசாமி, எம். ஏ. சாமி, சுல்தான்பேட்டை கருப்புசாமி, இரா. சோமு, பெரியதம்பி, மனோகரன் மற்றும் கழக தொழிற் சங்கத்தினர் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினார்கள்.

இவ்வாறு யு. ஆர். கிருஷ்ணன் தெரிவித்துள்ளார்.

## இந்தியாவிற்கு ரஷ்யா மருந்து அன்பளிப்பு

மாஸ்கோ, செப். 27— இந்தியாவிற்கு ரஷ்யா மருந்து குழந்தைகள் உணவு போன்றவற்றை அன்பளிப்பாக வழங்கியுள்ளது.

விமானம் மூலம் இந்த அன்பளிப்புப் பொருட்கள் விரைவில் வந்து சேரும் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## இங்கிலாந்து பிரதமர் தாட்சர் டெல்லி வருகிறார்

புதுடெல்லி, செப் 27- பிரிட்டிஷ் பிரதமர் மார்க்கரெட் தாட்சர் இம்மாதம் 29-ம் தேதி டெல்லி வருகிறார். ஹாங்காங், சீனாவுக்குச் சென்ற தாட்சர் இங்கிலாந்து திரும்புகிறார்.

வரும் வழியில் 29-ம் தேதி டெல்லிக்கு வருகிறார்.

டெல்லியில் பிரதமர் இந்திரா காந்தியை சந்தித்துப் பேசுவார். காலை உணவு சாப்பிடுவார்.

## மேலும் அதிக முஸ்லிம் உலமாக்களுக்கு ஓய்வூதியம் தர புரட்சித்தலைவர் உத்தரவு

சென்னை, செப். 27— மேலும் அதிக உலமாக்கள் பேஷ் இமாம்களுக்கு ஓய்வூதியம் வழங்க முதல்வர் புரட்சித் தலைவர் உத்தரவிட்டுள்ளார்.

தமிழ்நாட்டில் ஓய்வு பெற்ற உலமாக்கள், பேஷ் இமாம்கள், முத்தவல்லிகள் ஆகியோருக்கு ஓய்வூதியம் வழங்கும் விழா 30—9—82 அன்று சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடைபெற இருந்தது. ஏற்கனவே இதற்கான தகுதிபெற்ற உலமாக்களை, உலமாக்கள் ஓய்வூதியக் குழு தேர்ந்தெடுத்திருந்தது.

இதற்கடுத்து சமீபத்தில் மேலும் பல விண்ணப்பங்கள் ஓய்வூதியம் கோரி வந்துள்ளன.

இந்த விண்ணப்பங்களையும் பரிசிலித்து தகுதியின் அடிப்படையில் மேலும் அதிகமான பேர்களுக்கு ஓய்வூதியம் வழங்க வேண்டுமென முதல்வர் புரட்சித் தலைவர் விரும்புவதால் 30.9.1982 அன்று நடைபெறவிருந்த ஓய்வூதியம் வழங்கும் விழா வரும் அக்டோபர் முதல் வாரத்திற்கு தள்ளி வைக்கப்பட்டுள்ளது.

# முஸ்லிம் மக்களுக்கு அமைச்சர் ராஜாமுகமது பக்ரீத் வாழ்த்து



முஸ்லீம் பெருமக்கள் ஆற்ற வேண்டிய ஐம்பெரும் கடமைகளில் இறுதிக் கடமையாகக் கருதப்படும் 'ஹஜ்' யாத்திரைக்கும் பக்ரீத்துக்கும் நெருங்கிய தொடர்புண்டு. உலகின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் இஸ்லாமிய பெருமக்கள் ஒருங்கிணைந்து தியாகம் செய்வதற்காக அல்லாஹ்வின் உறைவிடத்திற்கு புனிதப்பயணம் மேற்கொள்வதே 'ஹஜ்' ஆகும்.

ஹஜ் கடமையின் தத்துவம் நம் முன்னோரின் தியாகங்களையும், அவர்களின் அரும் பெரும் செயல்களையும் நினைவில் கொண்டு, அஞ்சலி செலுத்துவதாகும். இதன் மூலம் இஸ்லாமிய மார்க்கத்தின் நீண்ட நெடிய வரலாற்றை நினைவு கூர்ந்து போற்ற ஏதுவாகின்றது.

மனிதன் மனிதனை திருப்திப்படுத்தி வாழ்வதை விட, அவனைப் படைத்த இறைவனை திருப்திப்படுத்தி வாழ்வதில்தான் நீடித்து நிலைத்து நிற்கும் மகிழ்ச்சியை, சாந்தியை பெற்றிட முடியும்.

இறைவனை திருப்திப்படுத்த வேண்டுமானால் சுயதேவைகளை சுருக்கிக் கொண்டு, மற்றவர்களின் தேவைகளையும் மனத்திலிருத்தி செயல்பட வேண்டும். வாழ்ந்து காட்ட வேண்டும். இவ்வாறு வாழ்வதில்தான் மனிதன் உண்மையான சுகத்தை சுகிக்க முடியும். அனுபவிக்க முடியும். தியாக மனப்பான்மையும், தியாக உணர்வும் வளரும்.

தியாகத்தின் முக்கியத்துவத்தைக் கொண்டாடுகின்ற இத்தியாகத் திருநாளில், இஸ்லாமிய சகோதரர்களுக்கு "பக்ரீத்" நன்னாளின் மகிழ்ச்சியையும், நல்வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

கா. இராசா முகமது
நீர்ப்பாசனத்துறை அமைச்சர்.

போளூரில்

## அண்ணா பிறந்த தினவிழா கூட்டம்

வடஆற்காடு, செப். 27- வட ஆற்காடு மாவட்டம் போளூர், செங்குணம் கிராமத்தில் அண்ணா பிறந்த தின விழா ஊர்வலமும், பொதுக் கூட்டமும் பி. சண்முகம் தலைமையில், பரசுராமன், பூங்கான் முன்னிலையில் நடைபெற்றது. கூட்டத்தில் கழக ஒன்றிய செயலாளர் ஏ. செல்வன், எஸ். கண்ணன், ப.பரந்தாமன் கோ. தருமன், பி. எம். அமுருதின் மற்றும் பலர் கலந்துகொண்டு சிறப்புரையாற்றினர்..

கழக அரசு நடவடிக்கை:

# எண்ணெய், பருப்பு, காய்கறி விலை பெருமளவில்குறைகிறது

சென்னை செப். 27- பாமாலின் எண்ணெய் போதுமான அளவுக்கு வினியோகம் செய்தது, பிற மாநிலங்களில் இருந்து தமிழகத்துக்கு கணிசமான அளவு பருப்பு வகைகள் வருவதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டது ஆகியவற்றால் பருப்பு எண்ணெய் விலைகள் குறைந்துவருகின்றன.

கடந்த ஜூலை ஆகஸ்ட் மாதங்களில் அதிகரித்துக் கொண்டேபோனபருப்பு மற்றும் எண்ணெய் ஆகியவற்றின் விலைகள் இந்த மாதம் குறைந்துள்ளன.

தமிழக சிவில் சப்ளை கார்ப்பரேஷன் உணவுப் பொருட்களை வினியோகம் செய்வதில் சீரான முறையை கடைப்பிடித்து வருகிறது. உணவுப்பொருள்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தில் தேங்கி நிற்காமல் அந்தப் பொருட்கள் பொது மக்களுக்கு முறையாக வினியோகம் செய்யப்படுவதில் தமிழக அரசு கவனமுடன் இருந்து வருகிறது.

ஆந்திரம், மகாராஷ்டிரம் முதலிய மாநிலங்களில் இருந்து பருப்பு வகைகள் கணிசமான அளவு தமிழகத்துக்கு வரத்தொடங்கியுள்ளன. இதனால் பருப்பு வகைகளின் விலை குறைந்துள்ளது. கடந்த ஜூலை ஆகஸ்டில் கிலோ ரூ 7க்கு விற்ற துவரம்பருப்பு ரூ. 6.25க்கு குறைந்து விட்டது.

உளுந்து 100 கிலோ கொண்ட மூட்டை ஒன்று ரூ. 500க்கும் 600க்கும் விற்றுக்கொண்டிருந்தது. தற்போது மொத்தவிலை மார்க்கெட்டில்ரூ. 300க்கும் ரூ. 350க்கும் குறைந்துள்ளது. இதைப் போல வேறு சில பருப்பு வகைகளின் விலையும் கிலோவுக்கு 50 காசு வீதம் குறைந்துள்ளது.

## மள மளவென விலை சரிகிறது

இந்த நிலைமைமேலும் அபிவிருத்தி அடையும் என்றும் வர்த்தக சங்கம் தெரிவித்துள்ளது.

காய்கறி விலைகளும் வெளி மார்க்கெட்டின் விலையைவிட காமதேனு சூப்பர் மார்க்கெட் மற்றும் நியாய விலைக்கடைகளில்குறைந்துள்ளது.

ஜூலை மாதத்தில் ரூ. 241 வரை விற்ற 15 கிலோ கடலெண்ணெய் டின் இப்போது ரூ. 223 ஆகக் குறைந்துள்ளது.



குடிநீர் பற்றாக்குறையை சமாளிக்க

# சென்னையில் 6 ராட்சச குழாய்க் கிணறுகள்: 500 குழாய்க் கிணறுகள்

## அரசு தீவிர நடவடிக்கை

சென்னை, செப். 27- சென்னை நகரில் குடிநீர் பற்றாக் குறையை சமாளிக்க கழக அரசு பல்வேறு நடவடிக்கைகளை எடுத்துள்ளது. மேலும் 6 ராட்சசக் குழாய்க் கிணறுகளை தாமரப்பாக்கத்தில் ஏற்படுத்த முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

நகரில் பல்வேறு இடங்களில் 500 குழாய் கிணறுகள் ஏற்படுத்தவும் திட்டமிடப்பட்டுள்ளது.

தென்மேற்குப் பருவ மழை சரியாகப் பெய்யாமல் பொய்த்து விட்டது. இதனால் சென்னை நகருக்கு குடிநீர் வழங்குவதில் தட்டுப்பாட்டு நிலைமைஏற்பட்டுள்ளது.

பருவமழை பொய்த்ததால் சோழவரம், புழல், பூண்டி ஆகிய நீர்த்தேக்கங்களில் நீர் மட்டம் குறைந்துவிட்டது.

இந்த 3 ஏரிகளிலும் கடந்த ஆண்டு இதே நாளில் 660 கோடி காலன் தண்ணீர் இருந்தது.

### அரசு தீவிர நடவடிக்கை

ஆனால் இப்போது 336 கோடி காலன் அளவுக்குத்தான் தண்ணீர் இருக்கிறது.

அக்டோபர் மாதத்தில் வடகிழக்குப் பருவமழை பெய்யும் என எதிர்பார்க்கப்படுகிறது. அதுவரை நகரில் குடிநீர் பற்றாக்குறையைச் சமாளிக்க அரசு பல்வேறு தீவிர நடவடிக்கைகளை எடுக்கத் திட்டமிட்டுள்ளது.

புழல் ஏரியில் தண்ணீர் மட்டம் குறைந்து வருகிறது அக்டோபர் முதல் அந்த ஏரியில் இருந்து பம்ப் செய்து தண்ணீர் எடுக்க வேண்டிய நிலை ஏற்படும்.

இப்படிப்பட்ட இக்கட்டான நிலையில் தற்போது 3 கோடியே 70 லட்சம் காலன் குடிநீர் வழங்கப்பட்டு வருகிறது. இதே அளவு குடிநீரை இன்னும் 45 அல்லது 50 நாட்களுக்கு வழங்கமுடியும் என்று குடிநீர் வழங்கு வாரியம் நம்புகிறது.

தாமரப்பாக்கத்தில் ஏற்கனவே 6 ராட்சச குழாய்க்கிணறுகள் செயல்படுத்தப்படுகிறது.

அங்குமேலும் 6ராட்சச குழாய்க் கிணறுகள் தோண்ட குடிநீர் வழங்கு வாரியம் முடிவு செய்துள்ளது.

நகரின் பல்வேறு பகுதிகளில் 500 குழாய் கிணறுகளை அமைக்கவும் திட்டமிட்டுள்ளது.

திண்டுக்கல்லில்

## நடந்த அண்ணா பிறந்தநாள் விழா

திண்டுக்கல், செப். 27- திண்டுக்கல் 10-வதுவட்ட கழகக்கிளையின் சார்பாக அண்ணா பிறந்த நாள் விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

வட்ட செயலாளர் வி. சுந்தரம் தலைமையில் நகர துணைச்செயலாளர் சி. முத்து கழகக் கொடி ஏற்றினார்.

பின்னர் மாலையில் பொதுக்கூட்டம் நடந்தது. மணிக்கூண்டு அருகே நடந்த இந்தப் பொதுக் கூட்டத்திற்கு ஆர்.துரைசாமி தலைமை வகித்தார். எஸ். எம். துரையரசன். மா. பொ.ரமேஷ், இரா, பழனிசாமி, சி. முத்து, என். முத்து, கே. துரை, எம். லட்சுமணன், ஏ. காளிமுத்து ஆகியோர் பேசினர், க. சுப்பிரமணி நன்றி கூறினார்.

ரஷ்யா அமைத்துக் கொடுக்க முன்வந்துள்ள

# 1000 மெகாவாட் அணு மின் நிலையம்: முடிவு ஆகவில்லை

## பிரதமர் இந்திரா காந்தி பேட்டி

சென்னை. செப். 27- இந்தியாவில் ரஷ்யா அமைத்துத் தர முன்வந்துள்ள ஆயிரம் மெகாவாட் அணுமின் நிலையம் குறித்து இன்னும் எவ்வித முடிவும் எடுக்கப்படவில்லை என்று பிரதமர் இந்திராகாந்தி கூறினார்.



ரஷ்யா சென்று வந்துள்ள பிரதமர் இந்திரா காந்தி டெல்லி விமான நிலையத்தில் நிருபர்கட்கு பேட்டி அளித்தார்.

நிருபர்களிடம் பிரதமர் இந்திரா காந்தி கூறியதாவது:—

நமக்கு நெருக்கடியான நேரங்களில் ரஷ்யா எப்போதுமே உதவியாக இருந்துள்ளது.

நமது தொழில் அபிவிருத்தியிலும் ரஷ்யா உதவி செய்திருக்கிறது.

நாம் எல்லா நாடுகளுடனும் நட்புறவுடன் இருக்கவே விரும்புகிறோம்.

ரஷ்ய உதவியுடன் இந்தியாவில் ஆயிரம் மெகாவாட் அணு மின் நிலையம் அமைப்பது குறித்து எவ்வித முடிவும் இன்னமும் எடுக்கப்படவில்லை.

இந்த அணுமின் நிலையம் குறித்து ரஷ்யா கூறியுள்ள விவரங்கள் பரிசீலிக்கப்படுகின்றன.

அதன்பின்பு தொழில் நுட்ப விவரங்களும் பரிசீலிக்கப்படவேண்டும்.

அணு ஆலைகளின் பாதுகாப்பு பற்றி ரஷ்யர்கள் எப்போதுமே மிக முன்னெச்சரிக்கையாக இருப்பார்கள்.

இவ்வாறு பிரதமர் இந்திரா கூறினார்.

அமைச்சர் பண்ருட்டியார் பேச்சு:

# தொழிலாளர் தலைவர்களின் ஏகபோகம் கூடாது

சென்னை, செப்.27- ஒரு தொழிற்சங்கத் தலைவர் பல சங்கங்களுக்குத் தலைவராக இருப்பதால் தொழிலாளர் நலன் கெடும் என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார். இதற்கும் உச்சவரம்பு தேவை என்றார்.



மறைந்த ரயில்வே தொழிலாளர் தலைவர் குருசாமியின் நினைவு விருது வழங்கும் விழா நேற்று நடைபெற்றது.

விழாவுக்கு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் தலைமை வகித்தார்.

நினைவு விருதை குருமூர்த்தியிடம் மத்திய அமைச்சர் ஆர்.வெங்கட்ராமன் வழங்கினார்.

இந்த விழாவில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசுகையில் கூறியதாவது:—

தொழிற்சங்கத் துறையில் ஒரே தலைவர் ஏராளமான சங்கங்களுக்குத் தலைவராக இருப்பது சரியல்ல.

இதனால் தொழிலாளர் நலன் கெடும்.

இத்தனை சங்கங்களுக்குத்தான் ஒரு தலைவர், தலைவராக இருக்கலாம் என்று ஒரு உச்சவரம்பு இருப்பது அவசியம்.

ஆர்ப்பாட்டம் இல்லாமல், ஆக்கபூர்வமாக அமைதி வழியில் நின்று தொழிற்சங்கத்தை நடத்தி வந்ததற்காகத்தான் இந்த விருது குருமூர்த்திக்கு கிடைத்துள்ளது.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

# கங்கை - காவிரி இணைப்பு: மத்திய அரசு பரிசீலனை

சேலம், செப் 27— கங்கை—காவிரி இணைப்புபற்றி பரிசீலிக்குமாறு மத்திய நீர்ப்பாசனத் துறையைப் பிரதமர் அலுவலகம் கேட்டுக்கொண்டுள்ளது.

கங்கை ஆற்றையும் காவிரியையும் இணைக்கும் திட்டத்தை விரைவில் செயல்படுத்த வேண்டும். இதன் மூலம் வடநாட்டிலுள்ள வெள்ளக் கொடுமைகளையும், தென் மாநிலங்களிலுள்ள வறட்சியையும் போக்க முடியும் என்று முன்னாள் எம். பி. ஆர். டி. பார்த்தசாரதி பிரதமர் இந்திராவுக்குக் கடிதம் எழுதியிருந்தார்.

கங்கை-காவிரி-குமரி இணைப்புகால்வாய்திட்ட மாநாடு சென்னையில் 1977-ல் நடந்தது. இந்த மாநாட்டின் தலைவராக ஆர். டி. பார்த்தசாரதி இருந்தார்.

### உலக வங்கி நிதியுதவி

உலக வங்கியிடம் ரூ. 2000கோடி கடன் வாங்கி இத்திட்டத்தை நிறைவேற்றலாம் என்று யோசனை கூறப்பட்டது. இத்திட்டம் பூர்த்தி அடைய 10 ஆண்டு காலம் ஆகும்.

இதுபற்றிய விவரத்தை பிரதமர் இந்திராவுக்கு கடந்த 11ந்தேதி ஆர்.டி. பார்த்தசாரதி எழுதியிருந்தார்.

இதன் சாத்தியக்கூறுகளை பரிசீலிக்குமாறு மத்திய நீர்ப்பாசனத் துறையை பிரதமர் அலுவலகம் கேட்டுக் கொண்டது. அதன்படி நீர்ப்பாசனத்துறை பொறியியல் நிபுணர்கள் இதனைப் பரிசீலித்து வருகிறார்கள்.



கலர்பிலிம் தொழிற்சாலை

உ.பி.யிலா?

## உதகை தொழிலாளர் கண்டன ஊர்வலம்

உதகை, செப். 27— புதிய கலர் பிலிம் தொழிற் சாலையை உ. பி. யில் உள்ள நைனிடாலில் அமைக்கும் யோசனைக்கு கண்டனம் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இந்துஸ்தான்போட்டோ பிலிம் தொழிற்சாலையைச் சேர்ந்த 2 ஆயிரம் ஊழியர்கள் உதகையில் கண்டன ஊர்வலம் நடத்தினார்கள்.

உத்தேச கலர் பிலிம் தொழிற்சாலையை உதகையிலேயே அமைக்க வேண்டும்என்று அவர்கள் மாவட்ட ஆட்சித் தலைவர் ஜெயந்தியிடம் மகஜர் அளித்தனர்.

பேரூத் படுகொலை:

# இஸ்ரேல் பிரதமருக்கு எதிராக 4 லட்சம்பேர் ஆர்ப்பாட்டம்

டெல்அவிவ், செப். 27— லெபனான் தலைநகரான பேருத்தில் நடந்த படுகொலையைக் கண்டித்து இஸ்ரேல் தலைநகரில் 4 லட்சம் பேர் ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள்.

இஸ்ரேல் பிரதமரும் பாதுகாப்பு அமைச்சரும் ராஜிநாமா செய்ய வேண்டும்! நீதி விசாரணை நடத்தப்பட வேண்டும் என்று கோரினார்கள்.

லெபனான் தலைநகரான பேருத்தில் ஆயிரக்கணக்கான பாலஸ்தீன அகதிகள் படுகொலை செய்யப்பட்டனர்என்பதுதெரிந்ததே.

இந்த பயங்கர படுகொலைக்கு இஸ்ரேலிய ராணுவம் துணை நின்றதாகக்குற்றம்சாட்டப்பட்டுள்ளது.

இஸ்ரேலியப் பிரதமர் பெகின், பாதுகாப்பு அமைச்சர் ஷாரோன் ஆகிய இருவரும் ராஜிநாமா செய்யவேண்டும் என்று 4 லட்சம் பேர்களும் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

இஸ்ரேலிய பிரதான எதிர்க்கட்சி மற்றும் சில எதிர்க்கட்சிகள் இந்த ஆர்ப்பாட்டத்தில் கலந்து கொண்டன.

இந்த பயங்கரப் படுகொலையில் இஸ்ரேலிய ராணுவத்தின் பங்கு பற்றி நீதி விசாரணை நடத்தப்படவேண்டும் என்றும் அவர்கள் கோரியுள்ளனர்.

# மண்டல விநியோக மையம், சென்னை.

## துவக்க விழா

## இந்தியாவிலேயே முதன்முறையானது

TANCO

TANCO

மத்திய விவசாய அமைச்சர் மற்றும் கிராமப்புற சீரமைப்பு மற்றும் பாசனம், இந்திய அரசு, புதுடெல்லி-110 001

**வாழ்த்துச் செய்தி**

நாட்டு மக்களுக்கு அவசியப் பண்டங்களை, நியாயமான விலையில் சில்லறை விற்பனை மூலம் கிடைக்கச் செய்வதற்கு, தமிழ்நாடு நுகர்வோர் கூட்டுறவு இணையம் லிமிடெட், சென்னையில் மண்டல விநியோக மையம் ஒன்றை அமைப்பது மகிழ்ச்சிக்குரிய ஒரு செய்தி. இந்த இணையும் ஏற்கனவே பெரிய கிடங்கு ஒன்றை நுகர்வோர் பொருட்களை சேமித்து வைப்பதற்காக விஞ்ஞான ரீதியில் அமைத்திருக்கிறது என்பதை அறிந்து பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

சென்னை நுகர்வோர் மையம் வெற்றி பெற வாழ்த்துக்கள்.

(ஒம்)

**ராவ்வீரேந்திரசிங்**

**எம். ஜி இராமச்சந்திரன்.**

முதலமைச்சர்

புனித ஜார்ஜ் கோட்டை சென்னை—600 009

சென்னை, செங்கற்பட்டு, வட ஆற்காடு, மாவட்டங்களில் இயங்கிவரும் நுகர்வோர் கூட்டுறவு அங்காடிகளுக்குத் தேவையானப் பொருட்களை கொள்முதல் செய்து விநியோகிப்பதற்கு ஏதுவாக தமிழ்நாடு நுகர்வோர் கூட்டுறவு இணையத்தின் சார்பில் சென்னையில் மண்டல விநியோக மையம் ஒன்று நிறுவப்பட இருப்பது மகிழ்ச்சிக்குரியது.

பொதுமக்களுக்குத் தேவையான பொருட்கள் தடங்கலின்றி நியாய விலையில் கிடைக்க பொது விநியோக முறையினை சீர்படுத்துவது மிகவும் அவசியமாகும். அந்த வகையில் சென்னையில் அமையவிருக்கும் மண்டல விநியோக மையம் மக்களுக்கு பயன் தரத்தக்க வகையில் பணிபுரிய வேண்டும் என விரும்புகிறேன்.

தமிழ்நாடு கூட்டுறவு கூட்டமைப்பின் முயற்சி வென்றிட வாழ்த்துகிறேன்.

(ஒம்)

**எம் ஜி. இராமச்சந்திரன்.**

முதலமைச்சர்.

மாண்புமிகு

**திரு. டாக்டர் நாவலர்**

**நெடுஞ்செழியன்**

மண்டல விநியோக மையத்தை துவக்குகிறார்.

**சி. பொன்னையன்.**

கூட்டுறவு மற்றும் சட்டத்துறை அமைச்சர்

புனித ஜார்ஜ் கோட்டை, சென்னை—600 009.

**வாழ்த்துச் செய்தி**

பொதுமக்களுக்கு நியாயமான விலையில் அவசியப்பண்டங்களை விநியோகிப்பதிலும், விநியோகம் தங்கு தடையின்றி சீராக பராமரிப்பதிலும், கூட்டுறவுகள் முக்கிய அங்கம் வகிக்கின்றன.

தமிழ்நாடு நுகர்வோர் கூட்டுறவு இணையம் இந்த அரிய பணியில் ஏற்கனவே பொது விநியோக முறையில் முத்திரை பதித்திருக்கிறது.

சென்னை 93, சாலிக்கிராமத்தில் அமைக்கப்பட்டுள்ள மிகப் பிரம்மாண்டமான கிடங்கு விஞ்ஞான ரீதியில் நுகர்வோர் பொருட்களை சேமித்து பாதுகாப்பதில் மண்டல விநியோக மையத்திற்கு பெரிதும் உதவும் என்றும் பரந்த அளவில் நுகர்வோர்களின் நலனுக்காக விலை அளவை சீராக பராமரிப்பதிலும் பெரிதும் உதவும் என்றும் நான் நம்புகிறேன்.

சென்னை நுகர்வோர் கூட்டுறவு இணையம் லிமிடெட் தனது நடவடிக்கைகளில் அனைத்து வெற்றிகளையும் பெற நான் வாழ்த்துகிறேன்.

(ஒ-ம)

**சி. பொன்னையன்.**

**கே. திரவியம், இ. ஆ. ப.**

தலைமை செயலாளர்

தமிழ்நாடு அரசு

புனித ஜார்ஜ்கோட்டை, சென்னை-600009

**வாழ்த்துச் செய்தி**

அவசிய பண்டங்களின் விநியோகத்தை சமமாக செய்வதிலும், சமூகத்திற்கு நிச்சயமாகவும், பாதுகாப்பாகவும் கிடைப்பதற்கு ஒரு இயக்கம் கூட்டுறவு நுகர்வோர் இயக்கம். இதே போல விலைவாசி நிலைமையை கட்டுப்படுத்துவதற்கு உதவும் இயக்கமும் நுகர்வோர் கூட்டுறவு இயக்கம் ஆகும். கூட்டுறவு துறையில் தலைமையிலும் வலுவான மரபுகளையும் வலுவான அஸ்திவாரத்தையும் அமைத்து இருக்கும் சாதனையில் தமிழ்நாடு உள்ளபடியே பெருமிதப்படலாம். நெருக்கடி அவசியமான இந்தத் துறையில் மிகவும் சிறப்பாக திட்டமிட்ட கூட்டுறவு முயற்சிகள் விஸ்தரிப்பால், நாட்டின் பொருளாதார வாழ்க்கை உயர்வடைந்திருப்பதாக பரிசீலிக்கப்படும்.

நாடு முன்னேற்றம் காண வேண்டுமானால், மகாத்மா காந்தி சொல்லிச்சென்றதை போல் "தரித்திர நாராயணன்" வாழ்க்கை நிலை உயர்த்தப்பட வேண்டும் என்பதில் நாட்டு மக்களுக்கு இப்போது இருப்பதைவிட இன்னும் உறுதியான அர்ப்பணித்த சேவையில் தமிழ்நாடு நுகர்வோர் கூட்டுறவு இணையம் மண்டல விநியோக மையம் வெற்றி நடைபோட வாழ்த்துகிறேன்.

(ஒம்)

**கே. திரவியம்**

**நிகழ்ச்சி நிரல்:**

வரவேற்புரை: திரு. கே. சந்திரசூடன், இ. ஆ. ப. பதிவாளர் கூட்டுறவு சங்கங்கள் சென்னை.

தலைமையுரை: மாண்புமிகு திரு. சி. பொன்னையன் பி.காம்., பி எல்.,

(சட்டம் மற்றும் கூட்டுறவுத் துறை அமைச்சர்)

துவக்கவுரை:

மாண்புமிகு திரு. டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் எம். ஏ.,

(உணவு மற்றும் நிதித்துறை அமைச்சர்)

நேரம்: மாலை 6-00 மணி

இடம்: 26, ஆற்காடு ரோடு, சாலிக்கிராமம், சென்னை-6000 13.

## விநியோகமுறையை சீரமைப்பதில் முன்னணியில் 'டான்கோ'

சுரண்டப் படுவதற்கு எதிராக, நுகர்வோர்களுக்கு பாதுகாப்பு அளிப்பதே, நுகர்வோர் கூட்டுறவுகளின் முக்கிய நோக்கம் ஆகும்.

நியாய விலையில், சரியான எடையில், தரமான பொருட்களை சாமானிய மக்களுக்குகிடைக்கச்செய்வதில் அவைகள் செயல்பட்டு வருகின்றன.

இந்த அரும்பெரும் பணியில், மாநில அளவில் தமிழ்நாடு நுகர்வோர் கூட்டுறவு இணையமும், இடைப்பட்ட நிலையில், 29 கூட்டுறவு ஒட்டு மொத்த விற்பனை நிலையங்களும் (944 கிளைகளுடன் ஆரம்ப மட்டத்தில 3,602 ஆரம்ப கூட்டுறவு நிலையங்களும் (384 கிளைகளுடன்) நுகர்வோர் கூட்டுறவுகளாக செயல்பட்டு வருகின்றன.

1981-82 ஆம் ஆண்டில் பொதுமக்களுக்கு சில்லறை விலையில் விற்பனை 192 கோடி ரூபாய் அளவுக்கு இருக்கவேண்டும் என்ற குறிய அளவில், நுகர்வோர் கூட்டுறவுகள் 211 கோடியே 30 லட்சம் ரூபாய் அளவுக்கு விற்பனை நடத்தியுள்ளது.

நாட்டில் நுகர்வோர் கூட்டுறவு இயக்கத்தில் தமிழ்நாடு முன்னோடியாக ஒரு அங்கம் வகிக்கிறது.

நகர்ப்புறங்களிலும் கிராமப்பகுதிகளிலும் செயல்பட்டு வரும் கூட்டுறவு கூட்டமைப்பு மிகவும் வலுவானதாகவும், ஸ்திரமானதாகவும், இருந்து வருகிறது. நாட்டின் நுகர்வோர் கூட்டுறவு மொத்த வர்த்தகத்தில் 10-ல் ஒரு பங்கு தமிழ்நாடு பெற்றிருக்கிறது.

**தமிழ்நாடு நுகர்வோர் கூட்டுறவு இணையம் லிமிடெட்:-**

தமிழ்நாடு நுகர்வோர் கூட்டுறவு இணையம் லிமிடெட் 1966-ம் ஆண்டு அமைக்கப்பட்டது. ஒருங்கிணைந்த சங்கங்களின் செயல்படும் முறைக்கு வசதியாகவும், ஸ்தாபன ரீதியில், அவற்றின் வளர்ச்சிக்கும் முக்கிய நோக்கமாகக் கொண்டு, இந்த இணையம் அமைக்கப்பட்டது. இந்த நோக்கத்தை எட்டிப் பிடிக்கும் வகையில் குறைந்தபட்ச லாபத்தில் மாநிலத்திற்குள்ளும், மாநிலத்திற்கு வெளியே இருந்து அவசிய பண்டங்களை ஒட்டு மொத்தமாக பெரும் அளவுக்கு கொள்முதல் செய்து, நுகர்வோர் கூட்டுறவுகளுக்கு இந்த இணையம் விநியோகித்து வருகிறது. 1974-75-ம் ஆண்டில் 9 கோடி ரூபாய் என்ற அளவில் இருந்த இணையத்தின் மொத்த விற்பனை 1980-81-ஆம் ஆண்டில், 21 கோடி ரூபாய் அளவிற்கு உயர்ந்திருக்கிறது. 1974-75-ஆம் ஆண்டில் 1 லட்சத்து 20 ஆயிரம் ரூபாயாக இருந்த நிகர இலாபம் 1980-81 ஆம் ஆண்டில் 4 லட்சத்து 76 ஆயிரம் ரூபாயாக அதிகரித்து இருக்கிறது.

**மண்டல விநியோக மையம்:**

மாநில அளவில் வலுவான ஒட்டுமொத்த விற்பனை பிரிவு இல்லாமல் இருப்பது கூட்டுறவு சில்லறை விற்பனையில் அடிப்படை பலவீனமாகும். சில்லறைவிற்பனை நிலையம் எப்படி சிறப்பாக திட்டமிடப்படுகிறது. வசதிகள் செய்து தரப்படுகிறது. அமைக்கப்படுகிறது என்பது விஷயமல்ல. நம்பிக்கையான அந்த நேரத்தில் நேர்த்தியான ஒட்டு மொத்த விற்பனை, விநியோக முறை பராமரிக்கப்படாவிட்டால் அதனுடைய தாற்றத்தில அபிவிருத்தி காணமுடியாது. இந்த போல அதிகப்படியான முன்னேற்றத்தையும் எதிர்பார்க்க முடியாது. ஆகவே நுகர்வோர் கூட்டுறவுக்கான வலுவான, ஒட்டு மொத்த விற்பனைப்பிரிவை பெரும வகையில் முன்னோடி திட்டமாக, பூரண கட்டமைப்பு வசதியோடு, ஸ்வீடன் மாதிரி பிராந்திய விநியோகமையம் ஒன்றை சென்னையில் அமைக்க உத்தேசிக்கப்பட்

(6-ம் பக்கம பார்க்க)

**என். கிருஷ்ணமூர்த்தி இ ஆ ப.**

ஆணையர் மற்றும அரசுச் செயலாளர்

உணவு மற்றும் கூட்டுறவுத் துறை

புனித ஜார்ஜ் கோட்டை

சென்னை—600 009

**வாழ்த்துச் செய்தி**

27-9-82 அன்று சென்னை சாலிக்கிராமத்தில் தமிழ்நாடு நுகர்வோர் கூட்டுறவு இணையத்தின் மண்டல விநியோக நிலையம் துவக்கம் தமிழ்நாட்டில் நுகர்வோர் கூட்டுறவுகளின் வரலாற்றில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க ஒரு மைல் கல்லாகும்.

மாநில அரசு பங்கேற்புடன் மத்திய அரசு ஆதரவிலான திட்டம், சென்னை தென் மண்டல தேசிய நுகர்வோர் கூட்டுறவு இணையம் தமிழ்நாட்டின், ஆலோசனை மற்றும மேம்பாட்டு பிரிவின் வழிகாட்டுதலின் கீழ் ஸ்வீடன் நாட்டு முறையில் அமைக்கப்பட்டிருக்கும் மண்டல விநியோக மையத்திட்டம் சென்னை, செங்கற்பட்டு மற்றும் வட ஆற்காடு மாவட்டங்களில் உள்ள நுகர்வோர் கூட்டுறவுகளின் தேவைகளை பூர்த்தி செய்து, உற்பத்தியாளர்கள் மற்றும் தயாரிப்பாளர்களிடமிருந்து நேரடையாக ஒட்டுமொத்த விற்பனை கொள்முதல்களின் பல அனுகூலங்களை கிடைக்கச் செய்யும் என்பதில் நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

விஞ்ஞான முறையில் சேமித்து வைத்து பாது

(2-ம பத்தி பார்க்க)

(3-ம் பத்தி தொடர்ச்சி)

காத்தல் என்ற நவீன கொள்கையும், விநியோகமும் நுகர்வோர் இயக்கத்திற்கு முன்னோடி.

இதுவே மண்டல விநியோக மையத்தின் குறிப்பிட்டுச் சொல்லும் சிறப்பு அம்சமாகும். ரூ. 100 லட்சம் முதலீட்டில் அமையும் மண்டல விநியோக மையம் வர்த்தக ரீதியில் வலுவானது என்பதிலும் கூட்டுறவு இயக்கத்தின் தன்மையை பரப்பும் முன்னோக்கு அரிய முயற்சி என்பதிலும் எந்தவித சந்தேகமும் இல்லை.

ஒட்டுமொத்த விற்பனை என்பதை உள்ளடக்கியிருக்கும் இத்திட்டம் தமிழ்நாட்டில் நுகர்வோர் இயக்கத்திற்கு புதிய உத்வேகம் தரும் என்பது உறுதி.

இந்த இனிய நாளில் இதயபூர்வமான வாழ்த்துக்களையும் நல்லாசிகளையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

(ஒம்)

**என். கிருஷ்ணமூர்த்தி**

**கே சந்திரசூடன், இ.ஆ.ப.**

பதிவாளர்,

கூட்டுறவு சங்கங்கள்,

சேப்பாக்கம்,

சென்னை—600 005.

**வாழ்த்துச்செய்தி**

சென்னையில், மண்டல விநியோக மையம் ஸ்வீடன் மாதிரியில் விரைவில் இயங்க இருப்பது உள்ளபடியே பெருமைக்குரிய விஷயம். கொள்முதலை மையப்படுத்தும் ஒருமுறையை கொண்டு வருதல் நுகர்வோர் கூட்டுறவுகளின் கொள்முதல் திறனை திரட்டி வலுப்படுத்துதல், விநியோகம், ஆய்வு மற்றும் நிர்வாகத்தில் நவீனமயம் கூட்டுறவுகளின் மனித வளங்கள் மற்றும் நிதி ஆதாரங்களை நேர்த்தியாகப் பயன்படுத்துதல். கூட்டுறவு சில்லறை விற்பனை நிலையங்களுக்கு இயன்ற அளவில் குறைந்த பட்ச விலையில் சிக்கனமான நம்பிக்கையூட்டும் நீடித்த விநியோகம், தனியார் பிரிவுக்கு எதிராகப் போட்டியை அபிவிருத்தி செய்தல், மற்றும் பொதுமக்களுக்கு சீரிய சேவை ஆகியவை மண்டல விநியோக மையத்தின் நோக்கமாகும்.

ஆரம்ப மற்றும் ஒட்டு மொத்த விற்பனை நுகர்வோர் கூட்டுறவுகள், தங்களுக்கு ஒன்றுபட்டு தங்களது பண்டங்கள் தேவைகளை தங்களுக்குச் சொந்தமான மண்டல விநியோக மையத்திலிருந்து மட்டுமே கொள்முதல் செய்வதன் மூலமும் இந்த நோக்கம் நிறைவேறும். இதேபோல நியாயமான விலையில் தரமான நுகர்வோர் பொருட்களை தங்கு தடையின்றி சுமுகமாக விநியோகிப்பதன் மூலமும், ஒருங்கிணைந்தசங்கங்களின் நம்பிக்கையை மண்டல விநியோக மையம், பெற முடியும். மண்டலவிநியோக மையமும், அதன் வரம்பிற்குள் வரும் நுகர்வோர் கூட்டுறவுகளும் ஒருங்கிணைந்த முறையில் செயல்பட்டு சேவையில் அர்ப்பணித்து நல்லிணக்கத்துடன்செயல்பட்டு மண்டல விநியோக மையம் பூரண வெற்றி அடையும் என்று நம்புகிறேன்.

இத்திட்டத்தின் துவக்க நாளில் மண்டல விநியோக மையம் பூரண வெற்றியைப் பெற தயங்கனிந்த வாழ்த்துக்களை வெளியிடுவதில் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

(ஒம்) பதிவாளர்

# மண்டல விநியோக மையத்தின் சிறப்பு அம்சங்கள்





இடம்:- சென்னை நகர எல்லைக்குள் சாலிக் கிராமம், கிராமத்தில் ஆற்காடு சாலையில் அமைந்திருக்கும் நிலத்தில் தற்போது உள்ள கட்டிடங்களோடு 2.98 ஏக்கர் பரபபில் 8 லட்சத்து 85 ஆயிரம் ரூபாய் மதிப்பில் வாங்கப்பட்டுள்ளது. 52 ஆயிரத்து 400 சதுர அடிபரப்பில் மிகப் பிரம்மாண்டமான கிடங்கு 6836 டன் கொள்ளளவுடன் நிர்மாணிக்கப்பட்டுள்ளது.

**தானியங்கும் பேக்கிங் மெஷின்:-** டேம்பர் ப்ரூப் சுத்தமான பாலிதின் பாக்கெட்டுகளில் தானியங்கள், விதைகள் ஆகியவற்றை ஒரு மணி நேரத்தில் ஒரு டன் அளவு பாக்கிங் செய்யும் ஆற்றல் திறமையுடன் தானியங்கும் "ப்ரிபாக்" மெஷின் அமைக்கப்பட்டுள்ளது. 1 லட்சத்து 30 ஆயிரம் ரூபாய் செலவில் பாலிதின் பாக்கிங் யூனிட் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. இங்கே நாள் ஒன்றுக்கு பளு அடர்த்தி பாலிதீன் பிலிம் பைகள் 4000 கிலோ தயாரிக்கப்பட்டு விநியோகிக்கப் படும்.

**பிளாஸ்டிக் கிரேடுகள்:-** பூாக்கிங் செய்யப்பட்ட பொருட்களை போக்குவரத்தில் கொண்டு செல்வதில் பந்தோபஸ்திற்கும், பிளாஸ்டிக் கிரேடுகள் பயன்படுத்தப் படுகின்றன. விசேஷமாக வடிவமைக்கப்பட்ட ரேக்குகளில் பொருட்களை சேமித்து வைப்பதற்கும் அவற்றை சுலபமாக வெளியே எடுப்பதற்கும் பாட்டரியில் இயங்கும் "போர்க் லிப்ட்டுகள்", பயன்படுத்தப்படுகின்றன.

**ரேக்குகள்:-** 16 அடி உயரத்திற்கு இந்த ரேக்குகள் RDCல் வடிவமைக்கப்பட்டுள்ளன. இது மாதிரியான ரேக்குகளில் எந்தவிதமான சிரமும் இல்லாமல் பெருமளவுக்கு பொருட்களை சேமித்து வைக்க ஒவ்வொரு பொருளுக்கும் தனித்தனியாக வசதி செய்யப்பட்டுள்ளது.

**தர சோதனை ஆய்வுக்கூடம்:** உணவுப் பொருட்கள் மற்றும் இதர நுகர்வோர் பொருட்கள் முன் கூட்டி சோதனைக்கென 1 இலட்சத்து 3000 ரூபாய் செலவில் தரசோதனைக்கென ஆய்வுக்கூடம் ஒன்றை அமைக்க இந்த இணையம் உத்தேசித்திருக்கிறது.

**எலக்ட்ரானிக் எடை மேடை:** லாரியில் பொருட்கள் இருந்தாலும். அந்தப் பொருட்களை சுலபமாகவும், துரிதமாகவும் எடைபோடுவதற்கு வசதியாக எலக்ட்ரானிக் எடைமேடை அமைக்கப்பட்டுள்ளது. குறிப்பிட்டு சொல்லக்கூடிய ஒரு அரிய திட்டம், இது என்பதால் அதனை நிரூபிப்பதற்கு RDC நிறுவனத்தின் நடவடிக்கைகளுக்கு பின்னணியில் பயிற்சி பெற்ற அதிகாரிகள் குழு ஒன்றும் செயல்படுகிறது

இத்துடன் கணிசமான சர்வீஸ் நிருபணத்துவத்துக்கும் குறைவில்லை.







# எங்கள் நல்வாழ்த்துக்கள்!

**கல்கத்தா கெமிக்கல்ஸ் கோ, லிமிடெட்**
5&6/149, பிராட்வே சென்னை-600 001

**மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட்**
லெஷ்மி பவன் 5-வது மாடி, 609, மவுண்ட்ரோடு
சென்னை-600006

**பாண்ட்ஸ் இந்தியா லிமிடெட்**
கலீல் சிராஜ் எஸ்டேட்,
6 வது மாடி, பாந்தியன்ரோடு, சென்னை-600 008

**அல்ட்ரா மெரைன் & பிக்மெண்ட்ஸ் லிமிடெட்**
25-B சிப்காட் இண்டஸ்டிரியல் காம்ப்ளக்ஸ்
ராணிப்பேட்டை 632 403

**யூனியன் கார்பைடு இந்தியா லிமிடெட்**
7&8, அண்ணா சாலை, சென்னை-600 002

**காஜல் & கும்கும் ப்ராடக்ட்ஸ், அரவிந்த் லாபரெட்டரீஸ்**
நெ. 7, சக்கரபாணி தெரு, சென்னை-600 038

**ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட்**
2 & 4, வது மாடி
பம்பாய் மியூச்சுவல் பில்டிங், சென்னை-600 001

**ஸ்ரீனிவாசன் & கோ**
238, ரஞ்சூரி கவுடர் தெரு,
கோயம்புத்தூர்-1.

**பாரீஸ் கன்ஃபெக்ஷனரி லிமிடெட்**
பாரி ஹவுஸ்,
II லைன் பீச், சென்னை-600 001.

**பல்சாரா & கோ (பி) லிமிடெட்**
43, என். நாசியர் ரோடு,
பம்பாய் 400 023.

**டாடா ஆயில் மில்ஸ் கோ லிமிடெட்**
இந்தியன் சாம்பர் பில்டிங்,
எஸ்பிளனேட், சென்னை 600 001.

**கோத்ரெஜ் அண்டு பாய்ஸ் மானுபாக்சரிங் & கோ. லிமிடெட்**
163, பிராட்வே சென்னை-600 001.

**க்ளாக்ஸோ லாபரெட்டரீஸ் (இ) லிமிடெட்**
39, வேளச்சேரி ரோடு, கிண்டி,
சென்னை-600 032.

**டி. எஸ். ஆர், & கம்பெனி**
கும்பகோணம்.

**குஜராத் கூட்டுறவு பால் விற்பனை பெடரேஷன் லிமிடெட்**
13, நுங்கம்பாக்கம் ஹைரோடு,
சென்னை-600 034.

**இன்டோ ஸ்விங் லிமிடெட்**
99, எட்வர்ட் எலியட்ஸ் ரோடு,
மயிலாப்பூர், சென்னை-600 004.

**கோத்ரெஜ் சோப் லிமிடெட்**
249, மௌபரீஸ் ரோடு, சென்னை-600 018

**சி. சந்திரப்பா & கோ**
மண்டி & கமிஷன் ஏஜண்ட்,
புதுமண்டிபேட். தும்குர் (கர்நாடகா)

**கட்ட வெங்கடேசம் செட்டி**
ஹிந்துப்பூர்

**சாஸ்திரி டிரேடிங் கம்பெனி**
24-3-81 பட்டினம் பஜார் ரோடு,
குண்டூர் (ஆந்திரப் பிரதேசம்)

**உல்சி ஆதிசேஷையா பர்ம்**
எலுருபஜார குண்டூர்

**இண்டஸ்டிரியல் ரிசர்ச் கார்ப்பரேஷன்**
த. ப. எண். 1104. 120, லே ஸ் பாலம ரோடு,
திருவான்மியூர், சென்னை—600 041

**டன்லப் இந்தியா லிமிடெட்**
டன்லப ஹவுஸ், 20, பட்டுலாஸ் ரோடு,
மவுண்ட்ரோடு, சென்னை—600 002

**நேஷனல் ரப்பர் மேனுபாக்சுரர்ஸ் லிமிடெட்**
34, கிரீம்ஸ் ரோடு, த. பெ. எண், 1070
சென்னை—600 006

**ஜெனரல் எலக்ட்ரிக் கோ-ஆப் இந்தியா லிட்**
தி மேகனட் ஹவுஸ், 861, அண்ணா சாலை,
சென்னை—600 002

**எல்வி & கோ**
125, D கச்சேரி ரோடு,
மயிலாப்பூர், சென்னை-600 004.

**இந்தியன் டூப்ளிகேட்டர் கம்பெனி லிமிடெட்**
125, நுங்கம்பாக்கம் ஹைரோடு,
சென்னை-600 034.

**பாஜ் சன்ஸ்**
1, பளேனட் இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சுபாஷ் ரோடு. பம்பாய் 400 057.

**குளோப் சூப்பர் பார்ட்ஸ்**
3979, ரோஷவரா ரோடு,
டில்லி 110 007.

**மைசூர் லேம்ப் ஒர்க்ஸ் லிமிடெட்**
15 கிருஷ்ணமாச்சாரி ரோடு,
சென்னை-600 034.

**பஜாஜ் எலக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**
142, அண்ணா சாலை, சென்னை-600 002.

**அசோசியேட் எலக்டிரிகல் ஏஜென்சீஸ்**
லெஷ்மிபவன், 4-வது மாடி,
609, மவுண்ட் ரோடு, சென்னை-600 006

**நேஷனல் ப்ளாஸ்டிக் எண்டர்பிரைசஸ்**
5, ரேவா சேம்பர்ஸ், 1வது மாடி
நியூமெரைன் லைன் பம்பாய்-400 020

**ஸ்ரீராம் எலக்டிரிகல்ஸ்**
திருவேங்கடம் தெரு,
மேற்கு மாம்பலம் சென்னை

**திரு. கே. சிட்டிபாபு**
2, பிராமின் தெரு,
வேளச்சேரி, சென்னை-600 032

**ஈஸ்ட் கோஸ்ட் கன்ஸ்ட்ரக்ஷன் இண்டஸ்டிரிஸ்**
1, மூர்ஸ் ரோடு சென்னை-600 006

**பெஸ்ட் & கிராம்ப்டன் இன்ஜினீயரிங் லிமிடெட்**
1 லைன் பீச், சென்னை — 600 001

**லக்கன்பால் நேஷனல் லிமிடெட்**
24, வேங்கடகிருஷ்ண ஐயர் ரோடு,
மந்தவெளி, சென்னை-600 028.

**கே. ஆர். பிரதர்ஸ்**
கேன்வஸிங் ஏஜெண்ட்ஸ்,
29, ஸ்ட்ரோதன் முத்தையா முதலி தெரு,
சென்னை 600 001.

**பூலானி இஞ்ஜினியரிங் கார்ப்பரேஷன்**
137, லிங்கி செட்டி தெரு,
சென்னை-600 001.

**யூனியன் கார்பைட் இந்தியா லிமிடெட்**
19, கமாண்டர்-இன்-சீப்-ரோடு, 4-வது மாடி
எக்மோர், சென்னை-600 008.

**சமர்ப்பன் பேப்ரிகேட்டர்ஸ் (பி) லிமிடெட்**
ப்ளாட் A 182/1-183, லேன் Z, ரோடு-16,
வேகள் ண்டஸ்டிரியல் எஸ்டேட்,
தானே, பம்பாய்-4.

**மெக்நீல் & மேகர் லிமிடெட்**
768, பவுண்ட்ரோடு, சென்னை-600 002.

**நார்னே துலாமன் மானுபாக்சுரர்ஸ் (பி) லிமிடெட்**
பாலநகா டவுன் ஷிப், ஹைதராபாத்-500 037

**ஜி எஸ். இண்டஸ்டிரீஸ்**
காட்டுக்குப்பம், மனாபேட் 607402 பாண்டிச்சேரி.




**தி நியூராஜ்பூர் மில்ஸ் கோ லிமிடெட்**
கோம்திபூர் ரோடு, அகமதாபாத்-380021.

**எஸ். ராமச்சந்திரா & கோ**
த. பெ. எண். 3533 C 12 சர்வோதயா நகர்.
I. பஞ்சர போலே ரோடு. பம்பாய்-400004.

**வி. ஆர். அசோசியேட்ஸ் பேப்ஸ் (பி) லிமிடெட்**
வசந்த் வாடி, 413 C கால்பா தேவி ரோடு
பம்பாய்-400002

**அனிலா சில்க் இண்டஸ்டிரிஸ்**
49 சொட்டாலால் பவன் 418 கால்பா தேவ் ரோடு
பம்பாய்-400002

**டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கோ**
19, லஸ் சர்ச் ரோடு, த. பெ. எண், 2901
சென்னை—600 004

**ஹில்லாக் லிமிடெட்**
ஜாம்ஷெட்பூர் கேட் (வெளியே)
அகமதாபாத்

**எம். சுரேஷ்குமார் & கோ**
10/12 விட்டோபா சந்து, வித்தல்வாடி, பம்பாய்—2

**கோபால கிருஷ்ணா டெக்ஸ்டைல் மில்ஸ்**
சுப்பிரமணியபுரம், பெங்களூர்—61

**ஸ்ரீ கிருஷ்ணா ஸ்பின்னிங் & வீவிங் மில்ஸ்**
சுப்பிரமணியபுரம் பெங்களூர்-61.

**எஸ். எஸ். எம். பிரதர்ஸ்**
54, கிடங்குத் தெரு, சென்னை—600 001

**தீபக் டெக்ஸ்டைல்ஸ்**
275/ஏ நியூ கிளாத் மார்க்கெட், அகமதாபாத்—2

**ஸ்ரீ முருகன் டெக்ஸ்டைல்ஸ்**
வீவிங் பேக்டரி, சென்னிமலை போஸ்ட்—638 051

**கிருஷ்ணா ராஜேந்திர மில்ஸ்**
பெங்களூர் ரோடு, மைசூர்

**பெங்களூர் மில்ஸ்**
127, தெறகு மாசிவீதி, மதுரை—625 001

**பி. ஆர். டெக்ஸ்**
65 ஏ, பட்டுக்கோட்டை ரோடு, அறந்தாங்கி

**மாரியம்மன் டெக்ஸ்டைல்ஸ்**
5, தியாகி நடேச முதலியார் தெரு,
2, அம்மாப்பேட்டை, சேலம்—3

**பார்த்திபா நிட்டிங் & கோ**
பிரமநல்லூர் ரோடு, திருப்பூர்—638 602

**ஃபபீனா டெக்ஸ்டைஸ்**
பால் ராஜேஷ்வர் ரோடு, முல்லக், பம்பாய்—80

**யூனிவர்சல் டெக்ஸ்டைல்ஸ்**
22, ரைபிள் ரேஞ்ச், லால்பகதூர் சாஸ்திரிமார்க்,
காட்கோபர், பம்பாய்-86

**பிரு சிந்தடிக்ஸ்**
26/28, வெல்கர் தெரு. (கோல்பட்லேன்) நிரயாசசகர்
பிரஸ் பில்டிங்ஸ், 13-பி 2 வது மாடி
கால்பாதேவி ரோடு பம்பாய்-2

**க்ரேடெக்ஸ் சில்க் மில்ஸ்**
ஹரினா இண்டஸ்டிரியல் எஸ்டேட் 2 வது மாடி
41/4 சகிவிஹார் ரோடு அந்தேரி, பம்பாய்-72

**ராமோலீன் சில்க் மில்ஸ்**
இண்டஸ்டிரி ஹவுஸ் மார்வா எஸ்டேட்
சகிவிஹார் ரோடு, அந்தேரி, பம்பாய்-72

**பி. பி. கோத்தாரி டெக்ஸ்டைல்ஸ்**
168/10, மெயின் ரோடு, ரத்னாகர் பேங்க் அருகில்
இச்சால் கரஞ்சி—416115 கோலாப்பூர் மாவட்டம்

**எஸ் குமார்ஸ்**
82, கிடங்கு தெரு, சென்னை-600 001.

**இந்திரா கார்மெண்ட்ஸ்**
40 பார்கீத் ரோடு சென்னை-600 017.

**ரஸ்தம் மில்ஸ் & இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்.**
த. பெ. எண் 131,
ததேஷ்வர் ரோடு, அகமதாபாத்-380 001.

**பார்வதி மில்ஸ்**
த. பெ. எண் 1, கொல்லம்-691 001.

**பி. ஜி டெக்ஸ்டைல்ஸ்**
த. பெ. எண் 189, பத்ரா (அருகில்)
பாணிகேட், பரோடா-390 006.

தமிழ்நாடு அரசு
நெடுஞ்சாலை மற்றும் ஊரகப் பணித்துறை,
கரும்புச்சாலை அபிவிருத்தித் திட்டம், பொன்னகர், திருச்சிராப்பள்ளி-1

## ஒப்பந்த அறிவிப்பு

எண். 12/82 நாள்: 13—9—82

தமிழ்நாடு அரசு ஆளுநருக்காகவும் அவரது சார்பாகவும் கண்காணிப்புப் பொறியாளர் (நெ) கரும்புச்சாலை அபிவிருத்தித் திட்டம், பொன்னகர், திருச்சிராப்பள்ளி—620 001 அவர்களால் என். சி. 162, 9-வது கிராஸ் தெரு, பொன்னகர், திருச்சிராப்பள்ளி—620 001-ல் உள்ள அவர்களது அலுவலகத்தில் கீழ்க்கண்ட வேலைக்கான அரக்கு முத்திரையிட்ட ஒப்பந்தங்கள் (ஷெட்யூல் டெண்டர்) 13—10—82 புதன்கிழமை அன்று பிற்பகல் 3-00 மணி வரையில் (அலுவலக கடிகாரப்படி) பெற்றுக் கொள்ளப்படும். இந்த ஒப்பந்தங்கள் கண்காணிப்புப் பொறியாளர் (நெ) கரும்புச் சாலை அபிவிருத்தித் திட்டம், பொன்னகர், திருச்சிராப்பள்ளி—620 001 அவர்களால் 13—10—82 அன்று பிற்பகல் 3-15 மணியளவில் திறக்கப்படும்.

| வ. எண். | வேலையின் பெயர் | வேலையின் மதிப்பீடு | முன் வைப்புத் தொகை |
|---|---|---|---|
| | திருச்சி க. சா. அ. தி. கோட்டம். பெரம்பலூர் சர்க்கரை ஆலை லிமிடெட், எறையூர். முதல் அழைப்பு | | |
| 1. | பழைய அங்கனூரிலிருந்து அங்கனூர் தாளவாய் செங்கமேடு வழியாக மாத்தூர் ரயில் நிலையம் வளசவுந்திர சோழபுரம் செல்லும் சாலையை அமைத்தல் (முதல் பாகம்) | | |
| | முதல் பகுதி 0/0—2/0 | 4,95,158 | 4,960/- |
| | இரண்டாம் பகுதி 2/0—4/0 | 4,75,883 | 4,760/- |

ஒப்பந்தப் படிவங்கள் கிடைக்குமிடம்: கோட்டப்பொறியாளர் (நெ) க.சா.அ.தி. ஆண்டிப்பட்டி பங்களா பொன்னகர், திருச்சி—1

நெடுஞ்சாலைத்துறை ஒப்பந்தக்காரர்தகுதி. இரண்டாம் வகுப்பு. 5. 00 லட்சம்

ஒப்பந்த அறிவிப்புப் பற்றிய விபரங்கள், குறிப்பிட்ட பட்டியல்களும் அதற்கான வரைபடங்களும், கோட்டப் பொறியாளர் (நெ) கரும்புச்சாலை அபிவிருத்தி திட்டம், ஆண்டிப்பட்டி பங்களா, பொன்னகர், திருச்சிராப்பள்ளி 1 அவர்களிடமிருந்து ஒரு செட்டுக்கு ரூ. 104.20 (ரூபாய் நூற்று நான்கும் பைசா இருபது மட்டும்) விற்பனை வரி உட்பட (திருப்பித்தரப்பட மாட்டா) செலுத்தி எழுத்து மூலமாக விண்ணப்பித்து எல்லா அலுவலக நாட்களிலும் அலுவலக நேரத்தில் 27—9—82 முதல் 12—10—82 வரை பெற்றுக் கொள்ளலாம். வங்கி உத்திரவாதப் பத்திரங்கள் முன் வைப்புத் தொகை பின் வைப்புத் தொகையாகப் பெற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

கண்காணிப்புப் பொறியாளர் (நெ)

DIPR/46394/82/15/maa

இந்தியா முழுவதும்

# ஐக்கோர்ட்டுகளிலும், கீழ்க்கோர்ட்டுகளிலும் ஒரு கோடியே 10 லட்சம் வழக்குகள் தேக்கம்

ஜெய்ப்பூர், செப். 27- இந்தியாவில் உள்ள எல்லா உயர்நீதி மன்றங்களிலும், கீழ் நீதிமன்றங்களிலும் ஒரு கோடியே 10 லட்சம வழக்குகள் தேங்கிக் கிடக்கின்றன.

ராஜஸ்தான் உயர்நீதி மன்ற நீதிபதி ஜி. எம். லோதா இந்தப்புள்ளி விவரத்தை தெரிவித்துள்ளார்.

இந்தியா முழுவதிலும் உள்ள நீதிமன்றங்களில் தேங்கிக்கிடக்கும் வழக்குகள் பற்றிய புள்ளி விவரங்களை அவர் சேகரித்துள்ளார்.

ஒரு கோடியே 10 லட்சம் சிவில் - கிரிமினல் வழக்குகள் முடிவுறாமல் தேங்கிக்கிடப்பதாக அவர் தெரிவித்துள்ளார்.

இதில் உயர்நீதி மன்றங்களில் மட்டும் 8 லட்சத்திற்கு மேற்பட்ட வழக்குகள் தேங்கிக் கிடக்கின்றன.

மற்ற கீழ் நீதிமன்றங்களில் ஒரு கோடிக்கும் மேற்பட்ட வழக்குகள் தேங்கிக்கிடக்கின்றன.

31 ஆண்டுகளுக்கு முன்பு அதாவது 1951-ல் உயர்நீதி மன்றங்களில் மட்டும் 54 ஆயிரம் வழக்குகள்தான் தேங்கிக் கிடந்தது என்றும் அவர் தெரிவித்தார்.

அப்போது இருந்த நீதிபதிகள் எண்ணிக்கையை விட இப்போது நீதிபதிகள் எண்ணிக்கை மும்மடங்கு ஆகியும் தேக்கம் 8 லட்சம் வழக்குகள் என்றார்.

நாட்டிலுள்ள உயர்நீதி மன்றங்களிலும், சுப்ரீம் கோர்ட்டிலும் காலியாக உள்ள நீதிபதி இடங்கள் நூறாகும்.

அந்தப்பதவிகள் இன்னமும் நிரப்பப்படவில்லை என்று நீதிபதி லோதா கூறினார்.

# 75 லட்சம் குழந்தைகள் உடல்நலம்வளரதொடர் மருத்துவ கண்காணிப்பு

## அமைச்சர் அண்டே தகவல்

**செங்கல்பட்டு, செப். 27- இலவச சத்துணவு சாப்பிடும் குழந்தைகள் உடல்நலம் மேலும் வளர தொடர்ந்து மருத்துவ பரிசோதனை செய்து வேண்டிய மருத்துவ உதவிகள் வழங்கப் படும் என்று அமைச்சர் அண்டே தெரிவித்தார்.**

செங்கல்பட்டில் இலவச கண்சிகிச்சை முகாம் நடந்தது. 311 பேருக்கு இலவச மூக்கு கண்ணாடிகளை மக்கள்நல்வாழ்வுத் துறைஅமைச்சர் டாக்டர் அண்டே வழங்கினார்.

அமைச்சர் அண்டே பேசும் போது "முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்தின் கீழ் பயன்பெறும் 75 லட்சம் குழந்தைகளுக்கு அவ்வப்போது மருத்துவப் பரிசோதனை செய்யப்படும் என்று தெரிவித்தார்.

ஒவ்வொருவருக்கும் தனித் தனியாக உடல் நல அறிக்கை தயாரிக்கப்பட்டு மாதம் மாதம் அந்தக் குழந்தைகளின் எடை குறிக்கப்படும். அவர்களின் உடல் நலம் வளர, எல்லா மருத்துவ நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படும் என்றும் அமைச்சர் தெரிவித்தார்.

மாவட்ட ஆட்சித் தலைவர் எச்.ஜே. ராமச்சந்திரன் பேசுகையில் இந்த ஆண்டு செங்கற்பட்டு மாவட்டத்தில் 4 ஆயிரம் பேருக்கு கண் அறுவை சிகிச்சை அளிக்கப்படும் என்று தெரிவித்தார்.

சென்னை கண் ஆஸ்பத்திரி உயர் அதிகாரி டாக்டர் சத்தியவாகீசன் மருத்துவ அறிக்கை படித்தார்.

குமரி மாவட்டத்தில்

## கழகத்தில் இணைந்த ஜனதா கட்சியினர்

குமரி, செப். 27— குமரி மாவட்டம் குலசேகர வட்டாரத்தைச் சேர்ந்த ஜனதா கட்சித் தலைவர் வி. ராபின்சன், மற்றும் ஒய். நெல்சன், எப். மத்தியாஸ் உட்பட 116பேர்அக்கட்சியிலிருந்து விலகி கழக மாவட்ட செயலாளர் எப். எம். இராசரத்தினம் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர். கழகத்தில் இணைந்த அனைவரையும் மாவட்ட செயலாளர் இராசரத்தினம், மாவட்ட அவைத் தலைவர் டாக்டர் நாகராசன், துணைச் செயலாளர் நாகப்பன் மற்றும் பலர் பாராட்டி வாழ்த்தினர்.

கலைக்குழு முகவரி
புரட்சிக்கனல
விமலா - வாசன் கலைக்குழு
நெ-292, I பிளாக்,
திரு. வி. க. குடியிருப்பு,
சென்னை—18



இந்திய உணவு கார்ப்பொரேஷன்

இணை மேலாளர் அலுவலகம்
(துறைமுக போக் [illegible])
சென்னை ஹவுஸ், 7 [illegible] னெட்
சென்னை—600001

## ஏல அறிவிப்பு

எண் H.G/FCI/US/SS/82-83—12

சென்னை துறைமுகத்தில் உள்ள இந்திய உணவு கார்ப்பொரேஷன் கிடங்கில் உள்ள உபயோகப்படுத்த முடியாத கோணிகள், hoop இரும்பு, கியர் பொருட்கள், ஒதுக்கப்பட்ட ஜீப்/வேன்/லாரி, கருப்பு பாலிதீன் கவர்கள் மற்றும் இதர பொருட்களுக்கு 14-10-82 அன்று காலை 11 மணியளவில் 'X' Ware house, சென்னை துறைமுகம், சென்னை-1ல் ஒரு ஏலம் நடைபெறும்.

ஏலத்தின் விதிமுறைகள், நிபந்தனைகள் மற்றும் இதர விவரங்களுடன் கூடிய ஏலம் போடப்படும் பொருட்களின் விவரங்களை மேற்கண்ட விலாசத்திலிருந்து ரூ. 10.55ஐ எல்லா வேலை நாட்களிலும் செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம். ஏலத்தின் விதிமுறைகள் மற்றும் நிபந்தனைகளை ஏற்கனவே வாங்கியவர்கள் தான் பொது ஏலத்தில் கலந்துகொள்ள அனுமதிக்கப்படுவர்.

தமிழ்நாடு அரசு
நெடுஞ்சாலை & கிராமப் பணித் துறை

## ஒப்பந்த அறிவிப்பு

ஒ. அ. எண்: 15-82 வ 1 நாள்: 9.9.82

தமிழ்நாடு ஆளுநருக்காகவும், அவருடைய சார்பாகவும், கீழே கொடுக்கப்பட்டுள்ள, வேலைகளுக்கு, அரக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பந்த நமூனாக்கள் கண்காணிப்புபொறியாளர் (நெ) கி.சா., திருநெல்வேலி இலக்கம் 34, ஏ. தாமஸ் தெரு, பெருமாள்புரம், திருநெல்வேலி-7 அவர்களால் 13-10-82 அன்று பிற்பகல் 3-00 மணிவரை (அலுவலகக் கடிகாரப்படி) கோரப்படுகின்றன. அவ்விதம் கோரப்பட்ட ஒப்பந்த நமூனாக்கள் கண்காணிப்புப் பொறியாளர் (நெ) கி.சா., திருநெல்வேலி அவர்களால் ஒப்பந்தக்காரர்கள் முன்னிலையில் அதே தினம் பிற்பகல் 3.15 மணிக்குத் திறக்கப்படும்.

| வ. எண் | வேலையின் பெயர் | முன் வைப்புத் தொகை ரூ. |
|---|---|---|
| 1. | தேவக்கோட்டை—தேவிப்பட்டினம் சாலையிலிருந்து டி. நாகனி செல்லும் சாலை மேம்பாடுசெய்தல் கி.மீ. 0-0 2-0 | 3640/- |
| 2. | தேவக்கோட்டை—தேவிப்பட்டினம் சாலையிலிருந்து டி. நாகனி செல்லும் சாலை மேம்பாடுசெய்தல் கி.மீ. 2-0 4-0 | 3540/- |
| 3. | தேவக்கோட்டை—தேவிப்பட்டினம் சாலையிலிருந்து டி. நாகனி செல்லும் சாலை மேம்பாடு செய்தல் கி.மீ. 4/0 6-0 | 3760/- |

அழைப்பு எண்: முதல் அழைப்பு
முடிக்க வேண்டிய காலம்: 8 மாதம்.
ஒப்பந்தக்காரரின் தகுதி: 3ம் வகுப்பும் அதற்கு மேலும்
ஒப்பந்த நமூனாக்கள் கிடைக்கும் இடம்: கோட்டப் பொறியாளர். (நெ) கி.சா. பரமக்குடி.

மேற்படி வேலைகளுக்கான ஒப்பந்த அறிவிப்பு பற்றிய நமூனாக்கள் விவரங்கள் குறித்த பட்டியல்கள் மற்றும் அதற்கான வரைபடங்கள் முதலியவற்றை கோட்டப்பொறியாளர் (நெ) கி.சா., பரமக்குடி. அவர்களிடமிருந்து ஒரு செட்டிற்கு ரூ. 104.50 (ரூபாய் நூற்று நான்கு பைசா ஐம்பது மட்டும்) விற்பனை வரி உட்பட திருப்பித் தரப்படமாட்டாது) செலுத்தி எழுத்து மூலமான வேண்டுகோளின்படி 4-10-82 முதல் 12-10-82 வரை பெற்றுக்கொள்ளலாம். (குறிப்பிட்ட ஆரம்ப முடிவு தேதி உட்பட) ஒப்பந்த நமூனாக்கள் இத்துறையில் பதிவு பெற்ற ஒப்பந்தக்காரர்களுக்கு மட்டும் வழங்கப்படும். அவ்வொப்பந்தக்காரர்கள் அந்தந்த பிரிவைச் சார்ந்த வகுப்பில் பதிவு பெற்றவராய் இருக்க வேண்டும். முன்வைப்புத் தொகை, பின்வைப்புத் தொகைகளுக்கு பேங்கு கியாரண்டிகள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. முன்வைப்புத் தொகைகளுக்கு அஞ்சலக சேமிப்பு பத்திரங்கள் இணைத்தால் அவை உரிய கோட்டப்பொறியாளர் (நெ) கி.சா. பெயருக்கு மாற்றப்பட்டிருக்க வேண்டும்.

கண்காணிப்புப் பொறியாளர் (நெ) கி.சா.
திருநெல்வேலி.

DIPR/46394/ pub I 82-14/ Maa

# விநியோக முறையில் சீரமைப்பதில்...

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

டுள்ளது.

நுகர்வோர் கூட்டுறவுகளின் கொள்முதல் திறனை அதிகரிக்கச் செய்தல், பேரம் பேசும் திறனை வலுப்படுத்துதல், மிகவும் சாத்தியமான அளவு குறைந்த செலவில் கூட்டுறவு சில்லறை விற்பனை நிலையங்களில் சுமூகமான தொடர்ச்சியான விநியோகத்திற்கு வழி செய்தல். தனியார் துறைக்கு எதிராக அவற்றின் போட்டியை அபிவிருத்தி செய்தல், பொதுமக்களுக்கு நீடித்த சேவை ஆகியவை மண்டல விநியோக மையத்தின் நோக்கங்களாகும். நுகர்வோர் பொருட்களை விற்பனை செய்தலிலும் விற்பனை மேம்பாட்டு நடவடிக்கைகளில் கவனம் செலுத்துவதிலும் சில்லறை விற்பனை பிரிவைப் பயன்படுத்துவதும் இதன் நோக்கமாகும், அதே நேரத்தில் ஒட்டுமொத்த விற்பனை பிரிவான மண்டல விநியோக மையம் கொள்முதலையும் சில்லறை விற்பனை நிலையங்களின் தேவைகளை விநியோகம் செய்வதையும் அவற்றின் இடம் தேடி ஏற்று நடத்தும்.

தேசிய கூட்டுறவு நுகர்வோர் இணையத்தின் ஆலோசனை மற்றும் மேம்பாட்டுப் பிரிவு, இந்திய அரசின் தூண்டுதலால், மண்டல விநியோக மையத்தை நிறுவுவதற்கு "ஸ்கேன்டிநேவியன்" மாதிரியில் நம் இந்திய நிலைக்கு ஏற்றவாறு மாற்றி அமைத்து ஒரு திட்டத்தைத் தயாரித்தது.

சென்னையில் உள்ள மண்டல விநியோக மையம் 101 லட்சத்து 40 ஆயிரம் ரூபாய் நிதி ஒதுக்கீட்டில் அமைக்கப்பட்டுள்ளது. நில ஆர்ஜிதம், கிடங்கு நிர்மாணித்தல், மரசாமான்கள் மற்றும் மையம் அமைப்பதற்கு தேவையான சாதனங்கள் வாங்குதல், டிரக்குகள் மற்றும் வாகனங்கள், நிர்வாக ஊழியர்கள் மற்றும் பங்கு மூலதனம் ஆகியவற்றிற்காக அரசு இந்த உதவித் தொகை அளித்திருக்கிறது.

மண்டல விநியோக மையத்தில் இருந்து பெரும் அளவுக்கு பொருட்களை கொள்முதல் செய்வதற்கான ஆரம்ப கூட்டுறவுகளுக்கு 6 இலட்சத்து 44 ஆயிரம் ரூபாய் மாநில அரசு நிதி உதவியளித்திருக்கிறது.

மண்டல விநியோக மையம், தனது செயல் மூலதனத்தை கணிசமான அளவுக்கு அதிகரித்துக் கொள்வதற்காக பங்கு மூலதனம் வடிவில் இணையத்திற்கு மாநில அரசு ரூ. 12 லட்சம் கூடுதல் உதவித் தொகையும் அதிகரித்துள்ளது.

போட்டிவிலையில் பொருட்களை விநியோகம் செய்வதற்கு வழிகாணுவதற்கு பெயர் பெற்ற மற்றும் முன்னணியில் இருக்கும் நுகர்வோர் பொருட்கள் தயாரிக்கும்உற்பத்தியாளர்களுடன் மண்டல விநியோக மையம் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளது.

விநியோகம் துவங்கும் முதல் முனையிலிருந்து பொருந்தும் கூட்டங்களில் தங்குதடையின்றி பொருட்கள் விநியோகத்திற்கு இணையம் முயற்சிகள் எடுத்துக் கொண்டுள்ளது. இயன்ற வரையில் கூடுதல் தள்ளுபடிகளுக்கும் இந்த இணையம் முயற்சிகளை மேற்கொண்டுள்ளது. மாநிலத்திற்கு உள்ளும் வெளியிலும் உற்பத்தி முனையில் விவசாயப்பண்டங்கள் கொள்முதலுக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

ஆலோசனை மற்றும் மேம்பாட்டுப்பிரிவு, இடம் தேர்ந்தெடுத்தல் கட்டடத்திற்கு வரையமைப்பு தயாரித்தல், மரச்சாமான்கள் மற்றும் விற்பனை உபகரணங்கள் வாங்குதல் ஆகியவற்றில் தன்னுடைய தொழில் நுட்ப ஆலோசனையை நல்கியுள்ளது. மேலும் இப்பிரிவு விஞ்ஞான நிர்வாக முறைகளில் முக்கியமாக இன்வென்டரி கண்ட்ரோல் திட்டம் மற்றும் பொருட்கள் விநியோகம், வழித்தட வரைப்படங்கள் தயாரித்தல் முதலியவற்றில் உதவியுள்ளது. இத்திட்டத்தை அமல்படுத்துவதற்குத் தேவையான போதிய அளவு பயிற்சியை இது ஊழியர்களுக்கு அளித்துள்ளது.

முதல்கட்டமாக மண்டல விநியோக மையம் சென்னை மற்றும் செங்கல்பட்டு மாவட்டங்களிலுள்ள நுகர்வோர் கூட்டுறவுகளின் தேவைகளுக்கு செயல்படும் இரண்டாவது கட்டமாக வடஆற்காடு மாவட்டத்திலுள்ள நுகர்வோர் கூட்டுறவுகளின் தேவைகளுக்கு செயல்படும்இதனால்மேலே கூறப்பட்ட மாவட்டங்களில் கூட்டுறவு ஒட்டுமொத்த விற்பனை நிலையங்களும், அவற்றின் 203 கிளைகளும் 128 ஆரம்ப நுகர்வோர் கூட்டுறவுகளும் பலனடையும்.

இந்ததிட்டத்தின் வெற்றி மண்டல விநியோக மையத்திற்கு மேலே சொன்ன சங்கங்களின் பரிபூரண ஒத்துழைப்பை பொறுத்து அமையும்.

மண்டல விநியோக மையம், ஆண்டு ஒன்றுக்கு 20 கோடி ரூபாய் விற்பனை வர்த்தகத்தை எட்டிப் பிடிக்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

இத்திட்டம் நாட்டில் ஒரு முன்னோடித் திட்டமாகும். சென்னை மண்டல விநியோக மையத்தின் அனுபவத்தையும். அதன் பலன்களையும் பொறுத்து, எதிர்காலத்தில் நாட்டில் எந்த ஒரு மூலையிலும் இது மாதிரி ஒரு திட்டம் அமையும் என்பதால் சென்னை மண்டல விநியோக மையத்தின் செயல்பாட்டுத் திறனை நாடே பெரும்வியப்போடு எதிர்பார்த்து நிற்கிறது.

ஸ்வீடன், பின்லாந்து ஆகிய இதர பல நாடுகளில் கூட்டுறவு விநியோகத்தின் வெற்றிக்கு திறவுகோலாக, மண்டல விநியோக மையம் நிரூபிக்கப்பட்டிருக்கும் போது, இந்தியாவில் இது வெற்றிக்கு உறுதி தானே!

## திருச்சியில் அண்ணா பிறந்த நாள்

திருச்சி, செப். 27— திருச்சி, திருவரங்கம் நகரத்தில் அனைத்துக் கழகக் கிளைகளிலும் பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழா கொண்டாடப்பட்டது. கழகத்தோழர்கள் 100க்கும் மேற்பட்ட இடங்களில் கழகக்கொடியேற்றி இனிப்புகள் வழங்கினர்.

திருவரங்கம் நகர செயலாளர் த. முருகன் தலைமையில் கே. சீனிவாசன், ஆர். கந்தசாமி, ஆ. குப்புசாமி, ஆர். மருதை என். சோமசுந்தரம், வி. நடராஜன், ஜி. லோகநாதன், ஆர், பிச்சுமணி, பி. வி. ராஜராஜன், துரை ஆகியோர் கலந்து கொண்டு பேசினர்.

# எதிர்க்கட்சிகள் கூட்டணி: என். டி. ராமராவ் தீவிரம்

**ஐதராபாத், செப் 27-அடுத்த சட்டசபைத் தேர்தலில் இ. காங்கிரசுக்கு எதிராக எதிர்க் கட்சிகள் கூட்டணி அமைத்துப் போட்டியிட வேண்டும் என்று என்.டி.ராமாராவ் கூறினார்.**

ஐதராபாத்தில் நிருபர்களுக்கு பேட்டி அளித்த தெலுங்கு தேசக்கட்சித் தலைவர் என். டி. ராமராவ் கூறியதாவது:-

இ. காங்கிரசார் யாரையும் எனது கட்சியில் சேர நான் அழைக்கவில்லை. அவர்கள் கோஷ்டி சேர்ப்பதில் இறங்குவார்கள்.

சட்டசபை தேர்தலில் இ. காங்கிரசுக்கு எதிராக எதிர்க்கட்சிகள் கூட்டணி அமைக்கப் பாடுபடுவேன்.

வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பதில் புதிய முறையை உண்டாக்குவேன.

ஒவ்வொரு தொகுதியிலும் 25 இளைஞர்களைத் தேர்ந்தெடுப்போம். அதன் பின் அவர்களில் மூவர் பொறுக்கி எடுக்கப்படுவர்.

பொதுக் கூட்டத்தில் அவர்களை அறிமுகப்

(4-ம் பத்தி பார்க்க)

(6-ம் பத்தி தொடர்ச்சி)

படுத்தி அவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுப்போம.

இவ்வாறு என். டி. ராமாராவ் கூறினார்.

காரை ஏற்றி கொன்று விடுவதாக தனக்கு கொலை மிரட்டல் கடிதம் வந்திருப்பதாகவும் என். டி. ஆர். சொன்னார்.

பெரியகுளம்தேர்தல்:

## கள்ள ஓட்டு போட வந்த ஐவர் கைது!

பெரியகுளம், செப், 26- பெரியகுளம் நாடாளுமன்ற இடைத் தேர்தலில் ஆள் மாறாட்டம் செய்ய முயன்றதாக 5 பேர் கைது செய்யப்பட்டனர்.

இவர்கள் வேறுபெயரில் கள்ளஓட்டுப் போட வந்தனர். அப்போது கைது செய்யப்பட்டனர்.

# அடுத்த மாதம் கலர் டெலிவிஷன் விற்பனை

புதுடெல்லி, செப். 27- நீண்டகாலமாக பேசப்பட்டுவரும் வண்ணத் தொலைக்காட்சிப்பெட்டி அடுத்தமாதம் முதல் விற்பனைக்கு வருகிறது.

கலர் டெலிவிஷனுக்கு வேண்டிய முக்கிய நுண்கருவிகள் வெளிநாடுகளில் இருந்துதான் இறக்குமதி செய்ய வேண்டியுள்ளது.

அப்படிப்பட்ட கருவிகள் 45 ஆயிரம் தென் கொரியாவில் இருந்து இறக்குமதி செய்யப்பட்டுவிட்டன. அவை அக்டோபர் 2ந் தேதிக்குள் டி. வி. தயாரிப்பாளர்களுக்கு விற்பனை செய்யப்பட்டுவிடும்.

அந்தக் கருவிகளை டி. வி. செட்டில் பொருத்தப்பட்டபின், கலர் டெலிவிஷன்கள் அக்டோபர் மாதம் 15ந்தேதி வாக்கில் விற்பனைக்கு வரும்.

45 ஆயிரம் கலர் கருவிகளும் தொலைக் காட்சி பெட்டி தயாரிக்கும் 22 கம்பெனிகளிடம் கொடுக்கப்படுகின்றன.

அடுத்தமாதம் மேற்கு ஜெர்மனியிலிருந்து மேலும் அதிக கலர்டெலிவிஷன் நுண்கருவிகள் வந்து சேருகின்றன.

கலர் டெலிவிஷன் (கொரியா கருவி பொருத்தப்பட்டது)ரூ 7500க்கும் மேற்கு ஜெர்மன் கருவி பொருத்தப்பட்டது ரூ. 8 ஆயிரத்துக்கும் கிடைக்கும்.

Published by K, Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras-600 029
Editor: E. PAKASURAMAN